1

# உலகம் மிகவும் அழகானது

இறைதந்தை மிகவும் நல்லவர்.
நமக்காக அழகான உலகைப் படைத்துள்ளார்
அது மிகவும் அழகானது.

எனது உடல் மிகவும் பெறுமதி வாய்ந்தது. நான் அதனைச் சுத்தமாக வைத்துக் கொள்வேன்.

எனது உடலைப் பெற்றுத் தந்த இறைவனை நான் அன்பு செய்கின்றேன்.

அறிவுரைப்பு : இப்பாடத்திற்குரிய செயற்பாடுகள் பின்னிணைப்பு இலக்கம் 1 இல் உள்ளது.

3

# எனது குடும்பம்

அம்மா, அப்பா மிகவும் நல்லவர்கள்.
எங்களிடம் மிகவும் அன்புடையவர்கள்.
அக்கா, அண்ணா, தங்கை, தம்பி நாங்கள் எல்லோரும் மிகவும் ஒற்றுமையாக உள்ளோம்.

# எம் உறவினர்

பாட்டி, பாட்டா ஒன்றிணைந்து என்றும் சுவை யான கதைகள் சொல்வர்.

மாமா, மாமி எல்லோருடனும் மகிழ்ச்சியாக நாம் அனைவரும் இருப்போம்.

எமது உறவினர்களை நாம் அன்பு செய்யும்போது இறைதந்தை எம்மையும் அன்பு செய்கின்றார்.

# இறைதந்தையின் அன்பின் வழி எமக்குக் கிடைத்த வேறு சிலர்

எம் ஆசிரியர்கள் மூலமாக இறைதந்தை எம்மை அன்பு செய்கின்றார்.

இயேசுவைப் போன்று நாமும் அயலவர்களையும் நண்பர்களையும் அன்பு செய்வோம்.

அறிவுரைப்பு : இப்பாடத்திற்குரிய செயற்பாடுகள் பின்னிணைப்பு இலக்கம் 2 இல் உள்ளது.

# இறைவன் படைத்த இந்த அழகிய உலகைப் பாதுகாப்போம்

மலர் கொய்ய வேண்டின்
கனி பறிக்க வேண்டின்
மரம் செடி கொடிகளைப்
பாதுகாப்போம்.

கிச்சி மிச்சி சத்தம் கேட்க வேண்டின்
பிராணிகளைச் செல்லமாய்ப் பார்க்க
வேண்டின்
மகிழ்ச்சியாக அவற்றைப் பராமரிப்போம்.

அறிவுரைப்பு : இப்பாடத்திற்குரிய செயற்பாடுகள் பின்னிணைப்பு இலக்கம் 3 இல் உள்ளது.

6

# கிறிஸ்தவப் பிள்ளை நல்ல பிள்ளை

குழந்தை இயேசுவோடு நாமும்
இறைதந்தையை வழிபடுவோம்.
பெற்றோர்க்குக் கீழ்ப்படிவோம்
பெரியவர்களை மதித்திடுவோம்.

அறிவுரைப்பு : இப்பாடத்திற்குரிய செயற்பாடுகள் பின்னிணைப்பு இலக்கம் 4 இல் உள்ளது.

# இறைதந்தையோடு உரையாடுவோம்

தலை வணங்கி
முழந்தாள் மடித்து
நாம் இறைதந்தையை
வழிபடுவோம்.
இறைதந்தையே,
நீர் எமக்களித்துள்ள அனைத்திற்காகவும்
உமக்கு நன்றி.

அறிவுரைப்பு : இப்பாடத்திற்குரிய செயற்பாடுகள் பின்னிணைப்பு இலக்கம் 5 இல் உள்ளது.

8

# திருச்சிலுவை

காலையும் மாலையும் நெற்றியிலும் உதட்டிலும் மார்பின் மத்தியிலும் திருச் சிலுவை அடையாளத்தை வரைந்திடுவோம்.

அறிவுரைப்பு : இப்பாடத்திற்குரிய செயற்பாடுகள் பின்னிணைப்பு இலக்கம் 6 இல் உள்ளது.

# 9

# நான் இறை பிள்ளையாவேன்

நான் திருமுழுக்குப் பெற்றுள்ளேன். அன்று முதல் நான் இறை பிள்ளையானேன். எனவே நான் கிறிஸ்தவக் குடும்பத்தின் உறுப்பினன் ஆனேன்.

அறிவுரைப்பு : இப்பாடத்திற்குரிய செயற்பாடுகள் பின்னிணைப்பு இலக்கம் 7 இல் உள்ளது.

10

# தூய மரியே இறைவனின் தாயே

இறை தாயே,

நீர் தாழ்மையும் தயவும் நிறைந்தவர்.

நீர் ஒருவரே

இயேசு ஆண்டவரின்

தாயாக வரப் பாக்கியம் பெற்றவர்.

அறிவுரைப்பு : இப்பாடத்திற்குரிய செயற்பாடுகள் பின்னிணைப்பு இலக்கம் 8 இல் உள்ளது.

# 11

# பராமரிக்கும் தந்தையான தூய யோசேப்பு

இவ்வுலகில் குழந்தை இயேசுவைப் பராமரித்தவர் தூய யோசேப்பு ஆவார்.
தூய யோசேப்பு தச்சு வேலை புரிந்தவர் ஆவார்.
தம்மைப் பராமரித்த தந்தைக்குக் குழந்தை இயேசு எப்பொழுதும் உதவிபுரிந்தார்.
அதேபோன்று நாமும் எமது பெற்றோருக்கு உதவிபுரிவோம்.

அறிவுரைப்பு : இப்பாடத்திற்குரிய செயற்பாடுகள் பின்னிணைப்பு இலக்கம் 9 இல் உள்ளது.

12

# இயேசு ஆண்டவரின் பிறப்பு

இயேசு பாலன் பிறந்தார்
எளிய மாட்டுத் தொழுவத்தில்
ஒற்றுமையும் சமாதானமும்
உமது வரவால் உதயமானதே
பகிர்ந்துண்டு வாழ்வதில்
பார் முழுதும் மகிழ்ந்ததே
மீட்பராம் இயேசுவே உமக்கே
உரியது இப்புகழ் யாவுமே.

அறிவுரைப்பு : இப்பாடத்திற்குரிய செயற்பாடுகள் பின்னிணைப்பு இலக்கம் 10 இல் உள்ளது.

13

# இயேசுவின் புதுமைகள்

கானாவூர் கல்யாண விருந்தில்
இரசம் தீர்ந்திடவே
இறை இயேசு வந்தார்; தண்ணீரை
இரசமாக மாற்றினார்
அருந்திய அனைவரும் ஆச்சரியம்
அடைந்தனர் மகிழ்ச்சியோடு
இறைவனுக்கு நன்றி நவில்ந்தனர்.

அறிவுரைப்பு : இப்பாடத்திற்குரிய செயற்பாடுகள் பின்னிணைப்பு இலக்கம் 11 இல் உள்ளது.

## 14

# திருச்சிலுவையை வென்றெடுத்த இயேசு ஆண்டவர்

இயேசு ஆண்டவர்
எமக்காகத் துன்பம்
அனுபவித்தார்.

எமது தவறுகளால்
மரணத்திற்குள்ளானார்.
எம்மீது கொண்ட
அன்பினால்
உயிர்த்தெழுந்தார்.

அறிவுரைப்பு : இப்பாடத்திற்குரிய செயற்பாடுகள் பின்னிணைப்பு இலக்கம் 12 இல் உள்ளது.

# 15

# திருவிவிலியம்

இறைதந்தையின் அன்பு வார்த்தைகள்
திருவிவிலியத்தில் அடங்கியுள்ளன.
கிறிஸ்வர்களாகிய நமக்கு திருவிவிலியம்
புனித நூல் ஆகும்.
இறைவார்த்தையை வாசிப்போம்,
செவிமடுப்போம்.
வாழ்க்கையில் அதனைக் கடைப்பிடிப்போம்.

அறிவுரைப்பு : இப்பாடத்திற்குரிய செயற்பாடுகள் பின்னிணைப்பு இலக்கம் 13 இல் உள்ளது.

16

# தூய யோசேவ் வாஸ் அடிகளார்

தூய யோசேவ் வாஸ் அடிகளார் நம் நாட்டின் - திருத்தூதராவார்.
இலங்கைக்கு வருகை தந்த வீரம் நிறைந்த தூயவர் அவராவார்.

17

# தூய ஆனாள் (அன்னம்மாள்)

ஆனாள் தாயே சுவக்கீன் தந்தையே
மரியா உங்கள் பிள்ளை.
நல்லது கெட்டதை அன்போடு
சொல்லிக் கொடுத்து வளர்த்த உங்கள்
அன்புச் செல்வி.

இறைவனை அன்பு செய்தமையால்
இறையன்னை பரிசாகக் கிடைத்தார்.
இறைமகன் இயேசு பேரனாகவும் கிடைத்தார்.
எனவே இறைவனுக்கு நன்றி நவில்ந்தீரே.

18

# தூய அந்தோனியார்

தூய அந்தோனியார் புதுமைகளின் தூயவர் ஆவார்.

இழந்த பொருள்களைக் கண்டுபிடிக்க உதவி செய்பவர் இவரேயாவார்.

19

# தூய செபஸ்தியார்

தொற்று நோய்களைக் குணப்படுத்த எமக்காக இறைவனிடம் வேண்டுபவர் தூய செபஸ்தியார் ஆவார்.

20

# திருத்தந்தை பிரான்சிஸ்

திருச்சபையின் தற்போதைய தலைவர்
திருத்தந்தை பிரான்சிஸ் ஆவார்.
அவரின் பிறப்பிடம் ஆர்ஜன்டீனா.
அவரின் வதிவிடம் உரோம மாநகரம்.
திருத்தந்தைக்காக
என்றும் செபிப்போம்.

பின்னிணைப்பு 1

## உமது உருவத்தை வரைந்து நிறம் தீட்டுங்கள்.

இறைவா,

என்னைப் படைத்தமைக்காக
உமக்கு நன்றி செலுத்துகிறேன்.
ஆமென்.

நீர் விரும்பிய செல்லப் பிராணி ஒன்றைத் தெரிவு செய்க. அதனைப் பார்த்து வரைந்து நிறம் தீட்டுங்கள்.

இறைதந்தை நமக்களித்த இந்த உலகை மேலும் அழகுபடுத்துவோம்.

இதிலுள்ள நற்செயல்களைச் செய்பவர்களின் படங்களைத் தெரிவு செய்து அதன் இலக்கத்தினை வட்டமிடுங்கள்.

1 

5 

2 

6 

3 

7 

4 

8

உங்களுக்குப் பிடித்த நிறப் பென்சிலால் புள்ளிகளின்மேல் வரையுங்கள்.

சிவப்பு நிறக் காகிதத்தைக் கிழித்து ஒட்டி மலரை அழகுபடுத்துங்கள்.

குழந்தை இயேசு தம் அன்னையை
அன்பு செய்ததைப் போன்று, நீரும்
உமது அம்மாவை அன்பு செய்வதாக
இறை அன்னைக்கு வாக்குறுதியளிக்கவும்.

பின்னிணைப்பு 9

தச்சுத் தொழிலுக்குப் பயன்படுத்தும் உபகரணங்களைத் தரப்பட்ட படங்களில் இருந்து தெரிவு செய்து படத்தில் தரப்பட்டுள்ள கதிரையோடு இணையுங்கள்.

பின்னிணைப்பு 10

இங்கு தரப்பட்டுள்ள நத்தார் மரத்தை அலங் கரிக்கவும்.

★ குழந்தை இயேசுவைப் போன்று நாமும் தாழ்மையாக இருப்போம்.

கொடிமரத்தில் உள்ள சொற்களைப் பூர்த்தி செய்யவும்.

நற்பணிகள் செய்யுங்கள். செய்யும் ஒவ்வொரு நற்பணிக்காகவும் இங்கே ஒரு மலரை ஒட்டவும். முள் முடியை ஒரு மலர் முடியாக மாற்றவும்.

★ வாழ்நாள் முழுவதும் இவ்வாறான நற் பணிகளைச் செய்யவும்.

புள்ளிகளை இணையுங்கள். அகல் விளக்கிற்கு நிறம் தீட்டவும்.

★ திருவிவிலியத்தை மதித்திடுவோம்